


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

20—8—1961


**வரிப்போடுகிறோம்**

நாட்டில் ஏராளமான இயற்கைச் செல்வங்களையும் மக்களுக்குப் பயன்படும்படி செய்ய வேண்டும். 2-ஐந்தாண்டுத் திட்டம் மூலம் கிடைத்த பணம் பணக்காரர்களிடமே போய்ச் சேர்ந்துள்ளது. அதை வெளிக் கொணரவே வரிப் போடுகிறோம். —முதலமைச்சர்



# அருள் வேட்டல்

சாமிபழனியப்பன்



கொல்லாமை நல்அமைதி உண்மை என்ற
கொள்கைகளின் தத்துவமாய்த் திகழ்ந்த மேலோய்!
எல்லாரும் உலகத்தாய் மக்கள் என்ற
இணையற்ற கொள்கையினை வாழ்விற் றாங்கித்
தொல்லுலகில் மனிதகுல வாழ்வுக் கான
தூயதொரு தொண்டுக்கே உன்னை ஈந்தாய்
பல்லுலகும் 'தேசபிதா' என்றிந் நாளில்
பரவிமகிழ் ஒப்பரிய புகழைக் கொண்டாய்

மேதைகளை வீரர்களை நல்கு கின்ற
மேலான பெண்குலத்தைப் பேதை யாக்கும்
பேதைமையைச் சாடி இந்தப் பெருவை யத்தில்
பெண்களும் ஆண் மக்களொடு சமமே என்னும்
மேதக்க கொள்கையினை எடுத்துச் சொன்னாய்
மேதினியில் யாவர்க்கும் ஒழுக்கம் சொன்னாய்
கோதற்ற புன்னகையால் உலக மக்கள்
உள்ளத்தை ஒருசேரக் கொள்ளை கொண்டாய்!

இரக்கமற்ற போர்வெறியை எள்ளித் தள்ளி
இணையற்ற 'ஒத்துழையாக் கொள்கை' என்னும்
சிறப்பான நல்லறப்போர் நெறிவ குத்துத்
திகழ்பரதம் நல்லுரிமை பெற்று வாழுந்
திறனீந்த பொன்மேனிச் செம்மால்! உன்றன்
சீர்த்தியினை வார்த்தையிலே அடக்கப் போமோ?
வறுமையினால் கொத்தடிமைக் கொடுமை தன்னால்
வாழ்விழந்த பாரதத்தை வாழ்வித் தாய் நீ!

வறுமையிலே ஒருசாரார் நைந்து மாய
வளமையிலே ஒருசாரார் மகிழ்ந்து வாழும்
சிறுமைநிலை கண்டுநீ சினந்தெ ழுந்தே,
'செய்தொழிலில் இழிவில்லை' என்று சொன்னாய்
வறுமையிலே உழல்கின்ற மக்க ளெல்லாம்
வளங்காணக் கைராட்டைச் சுற்றச் சொன்னாய்
மறையாக உன்சொல்லைக் கொண்டோ ரெல்லாம்
மகிழ்ச்சியொடும் அமைதியோடும் வாழ்கின் றார்கள்.

அருங்குணத்துப் பேரிமயம் போல வாழ்ந்த
அண்ணலே! வற்றாத அருளின் ஊற்றே!
திருநாட்டு மக்களுளே ஒருசா ராரைத்
தீண்டாதார் எனச்சொல்லி ஒதுக்கி வைக்கும்
பெருங்கொடுமை தீதென்றாய்; பார தத்தாய்
பெற்றெடுத்த மக்களெலாம் சமமே என்றாய்!
விரும்பாத மதவெறியை ஒழித்துக் கட்ட
மேற்கொண்ட நின்செயலை உலகம் போற்றும்

மதிகெடுத்து நிதிகெடுத்துக் குடிகெ டுத்தே
மானக்கே டுண்டாக்கி வாழ்வ ழிக்கும்
மதுஒழித்துக் குடியரெலாம் குடிக ளாக
வளமார்ந்த இந்நாட்டு மன்ன ராகப்
புதுவாழ்வு வாழ்வதற்கு வழிவ குத்தாய்
பூரணனே! கதியின்றிக் கலங்கி னோர்க்குக்
கதிகாட்டி மதிகாட்டிக் கடமை காட்டிக்
காத்தருளத் தோன்றிய நின் கருணை போற்றி!

நாட்டுப்பற் றில்லாமல் இந்த நாட்டின்
நல்வாழ்வில் அக்கறையே துளியு மின்றித்
தேட்டமெலாம் தன்மனைவி மக்கள் சொத்து
தான்என்ற சிறுநினைப்பே கொண்டு வாழ்ந்த
நாட்டவர்க்கு நல்லுரிமை வேட்கை யூட்டி
நாட்டுநிலை மாற்றுவித்தாய்! படிப்பில் லாரும்
நாட்டாட்சி அரசியலில் ஞானம் பெற்று
நனியோங்கும் நன்னிலையைத் தோற்று வித்தாய்!

உத்தமனே இவ்வுலகம் உவந்து போற்றும்
ஒளிச்சுடரே! நித்திலமே! பார தத்தின்
கொத்தடிமை தனைநீக்கி வளங்கள் யாவும்
கொழிக்கின்ற வகைசொல்லிக் காத்த வாழ்வுத்
தத்துவமே! கொடுங்குண்டால் உன்னைத் தீர்த்த
சண்டாளன் தனையும்நீ முனிந்தா யில்லை
இத்தரையில் முனிவினையே முனிந்த உன்றன்
இறைமையினைப் பணிந்தேத்த அருள்செய் வாயே!

# விஞ்ஞானச் சொல்லாக்கமும் முன்னேற்றமும்

★

தற்கால உலகின் அமைப்பு, விஞ்ஞானத்தின் மூலமாகவும், அதன் காரணமாக மக்களிடையே பெருவாரியாக ஏற்படும் மாறுதல்களினாலும் உருவாக்கப்படுகிறது. விஞ்ஞான ஒருமைப்பாட்டை ஏற்படுத்தி கலாசாரத்தை மலரச் செய்யும் சக்தி வாய்ந்தது; அதன் நோக்கங்களும், கண்டுபிடிப்புகளும் எல்லாருக்கும் பொதுவானவை. பிராந்திய, தேசீய எல்லைகளையும், தத்துவக் கோட்பாடுகளையும் கடந்து செழித்து வளரக் கூடியது. அதில் கூட்டுறவுக்குத்தான் முதலிடமே ஒழிய, போட்டிக்கல்ல; அதன் வேர்கள் மனிதனின் சக்திக்கும் ஆதர்சங்களுக்கும் இடையே ஊன்றி நிற்கின்றன.

மனம் திறந்த விவாதம், விஞ்ஞான அறிவைப் பரிமாறிக்கொள்வது, விஞ்ஞானிகளுக்கிடையே நெருங்கிய தொடர்பு இருப்பது ஆகியவையே விஞ்ஞான வளர்ச்சியின் ஆதாரம். இது, விஞ்ஞான சஞ்சிகைகள் மூலமாகவும், தேசீய, சர்வதேச மகாநாடுகள் வழியாகவும் நடைபெறுகின்றன. தற்போது, ஒவ்வொரு ஆண்டும், விஞ்ஞான தொழில்நுட்ப விஷயங்களை விளக்கும் பத்து லட்சம் கட்டுரைகளும், சுமார் ஐம்பதாயிரம் புத்தகங்களும், அதே எண்ணிக்கை அறிக்கைகளும் வெளியிடப்பட்டு வருகின்றன. ஆராய்ச்சி முடிவுகளை வெளியிடுவதற்கும், விஞ்ஞான அறிவைப் பரிமாறுவதற்குமாகப் பயன்படுத்தப்படும் முக்கிய மொழிகள் ஆங்கிலமும், ரஷ்ய மொழியுமாகும். அதற்கு அடுத்தபடியாக ஜெர்மன் மொழியையும், பிரெஞ்சு மொழியையும் குறிப்பிடலாம்; ஆனால், இம்மொழிகளுக்கு இருபது ஆண்டுகட்கு முன்னிருந்த முக்கியத்துவம் இப்போது இல்லை. ஐம்பது சதவிகிதத்துக்கும் அதிகமான விஞ்ஞான புத்தகங்கள் ஆங்கிலத்தில் வெளியிடப்படுகின்றன. இம்மொழிகள் வகித்துவரும் உயர்ந்த ஸ்தானம், அம்மொழிகளைப் பேசுவோர் விஞ்ஞானத் துறையில் ஆற்றியிருக்கும் பணியைக் குறிக்கிறது.

## விஞ்ஞானமும் மொழியும்

விஞ்ஞான ரீதியான கருத்துக்கும், அதன் பரிமாற்றத்துக்கும் இன்றியமையாதவை திட்டவட்டமாகத் துல்லியமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன; அவை விஞ்ஞானத்தின் ஒவ்வொரு துறைக்கும் ஏறத்தாழ விசேஷமானவையாகும்; ஒரு விஷயத்தை விளக்கும் பதம் மொழிக்கு மொழி, வேறுபட்டிருப்பினும், அதன் பொருள் துல்லியமான ஒன்றுதான். விஞ்ஞானப் பதம் ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாறும்போது அதன் பொருள் சிறிதும் சிதைவுறாமல் பார்த்துக்கொள்ளப்படுகிறது. (அவ்விரு மொழிகளின் தன்மை எப்படியிருந்தாலும் சரி). ஆனால், அதைக் குறிக்கும் சொல் பொதுவாக மாறுபட்டிருக்கிறது. விஞ்ஞானத் துறையல்லாத பிற துறைகளில் பதத்தின் பொருள் துல்லியமாக நிர்ணயிக்கப்படுவதில்லை.

## சர்வதேச பதங்கள்

விஞ்ஞான பதப் பிரயோகங்களில் மிகவும் பிரதானமாக குறிப்பிட வேண்டியது எல்லா, அல்லது பெரும்பாலான ஐரோப்பிய மொழிகளிலும் ஒரே பதங்கள் இருப்பதாகும். பொருள்களின் தன்மைகளையும், தோற்றங்களையும் குறிக்கும் தொழில்நுட்ப பதங்கள், சாதாரண பேச்சு வழக்கிலிருந்து எடுக்கப்பட்டு துல்லியமான விஞ்ஞான அம்சங்களைக் குறிப்பவை, சாதாரண பேச்சு வழக்கில் காணப்படாது, விஞ்ஞான காரியங்களுக்காகவே சிறப்பாக உருவாக்கப்பட்டவை ஆக இருவகை உண்டு.

## இந்தியாவில் விஞ்ஞான பதங்கள்

விஞ்ஞான பதங்கள் சம்பந்தப்பட்ட பிரச்னையில் பிராந்திய மொழிகளில் மிகச் சிறந்த கவனம் செலுத்தப்படுகிறது; அது மிகவும் முக்கியமாகவுமிருக்கிறது; இப்பிரச்னையைப் பற்றி ஆராயும்போது, உயர்தரப் படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் வேண்டிய தேவைகள், பள்ளிக் கல்விக்குரிய தேவைகள், விஞ்ஞானத்தைப் பாமர மக்களிடையேயும் பரவச் செய்வது ஆகியவை தனித்தனியாக கவனிக்கப் பட வேண்டியவையாகும்.

முதன் முதலாக, வேகமாக வளரும் புத்தம் புதிய பதங்களிலும், அவை வழங்கப்படுகிற மொழிகளிலும் இருக்கவேண்டும்; விஞ்ஞானக் கருத்துப் பரிமார்றத்துக்கும் அது கருவியாக இருக்கவேண்டும். இதற்கு ஆங்கில மொழி சிறந்தது என்பது கூறாமலே விளங்கும். விஞ்ஞானப் பாடத்தில் பட்டப் பிற்காலப் படிப்பை முடிப்பதற்கும், எஞ்சினீயரிங், வைத்தியம் போன்ற தொழில் படிப்புகளுக்கும். இந்த மொழியைப் போதுமான அளவு தெரிந்து கொண்டிருப்பதும், அதைப் பயன்படுத்துவதற்கு வேண்டிய திறமை இருப்பதும் அவசியமாக்கப் படவேண்டும். பட்டப் படிப்புக்கு முற்பட்ட வகுப்புகளில் கூட இன்னும் சில காலத்துக்கு அப்படி இருப்பது நன்மை தரும்.

விஞ்ஞானத் துறையிலும், தொழில் துறையிலும் நாம்முன்னேறுவதற்கு, பல்கலைக் கழகங்களிலும், தொழிற் கல்வி நிலையங்களிலும் ரஷ்ய மொழி கற்பதற்கு வசதியிருப்பது அவசியமாகும்.

பள்ளிகளிலும், கைவினைஞர், தொழிலாளர் பயிற்சியிலும், விஞ்ஞானத்தைப் பாமர மக்களிடையே பெருமளவு பரப்பும் விஷயத்திலும் கல்வி மொழி பிராந்திய மொழியாக இருப்பது முக்கியம்.

இந்தியாவிலுள்ள பல்வேறு மொழிகளுக்கு பொதுவான விஞ்ஞான பதங்களை உருவாக்க நினைப்பது நடைமுறையில் சாத்தியமல்ல. விஞ்ஞானத் துறையிலாயினும் சரி, அல்லது பிற துறைகளிலாயினும் சரி, பொதுவான பதங்களை, பொதுவான மொழிகளின் அடிப்படையிலேயே உருவாக்க முடியும். உதாரணமாக, ஐரோப்பிய மொழிகளில் பொதுவான விஞ்ஞான பதங்களில்லை.

பட்ட வகுப்புக்களுக்கு முற்பட்ட வகுப்புகளில் பிராந்திய

(11-ம் பக்கம் பார்க்க)



### தமிழகத்திற்கு
# வினோபாஜியின் வேலைத் திட்டங்கள்

கிராமதான வாசிகள் விவசாயத்துடன் குடிசைத் தொழில்களை வளர்ப்பது அவசியமாகும். இன்றைய நிலைமையில் சிறிய விவசாயிகள் வெறும் விவசாயத்தை மட்டும் நம்பி வாழ முடியாது.

*

சாந்தி சைனிகர்களின் வேலை, விசேஷ காலத்தில் அமைதியை காட்டுவதாகும். ஆனால், அவர்களின் நித்திய வேலை மக்களுடன் தொடர்பு கொள்ளுதலும் பூமிதானம் பெறுதலும் என்பதை உணரவேண்டும்.

*

பூமிதானம் பெறுவது தொடர்ந்து நடைபெறவேண்டும். கிராமதானத்திற்குப் பிறகு பூமிதானம் நின்றுவிட்டது என்பது சரியல்ல. பூமிதானம் பெற்றவுடனேயே அதை விநியோகம் செய்துவிடவேண்டும். பூமி விநியோகம் செய்த பிறகுதான் அந்த வேலை முடிந்ததாகக் கருதப்பட வேண்டும்.

*

பூமிதானம் கிடைத்த பழைய நிலங்களை விநியோகிப்பதில் எல்லோருடைய உதவியையும் பெற்றுக்கொள்ள வேண்டும். நம்முடைய விநியோக முறைகள் இருக்கின்றன. அவற்றை அனுசரித்து விநியோகம் நடைபெறுகிறதா என்பதுதான் நாம் கவனிக்கவேண்டியது. சில பூமிதான ஊழியர்கள் மாத்திரம் நில விநியோகம் செய்ய வேண்டும் என்பது அவசியமில்லை.

*

தமிழ்நாட்டில் மிகப் பரந்த அளவில் கதர் வேலை நடைபெறுகிறது. இந்த அளவிற்கு மிகவும் குறைவாகவே நூல் காணிக்கைக் கிடைக்கிறது. இது சரியல்ல. பஞ்சாபில் நடைபெற்ற மாதிரி குறைந்தபட்சம் ஜனத் தொகைக் கணக்குப்படி 1 சதவிகித நூல் காணிக்கையாவது கிடைக்க வேண்டும்.

*

சர்வோதயப் பாத்திர வேலை தெனாலியில் நல்ல முறையில் நடைபெற்றுவருகிறது. அந்த அடிப்படையில் 'பூதான்' பத்திரிகைக்கு 21 ஆயிரம் சந்தா சேர்த்துள்ளார்கள். இவ்வுதாரணங்களை நேரடியாகப் பார்த்து நமக்கு வழி துலங்கவேண்டும். சர்வோதய மண்டலத்திலிருந்து யாராவது தெனாலிக்குச் சென்று, 10, 12 நாட்கள் தங்கி, எல்லா வேலைகளையும் நேரில் பார்த்து, தமிழ்நாட்டிலும் மதுரை மற்றும் இதர நகரங்களிலும் இவ்வேலையை நடத்த வேண்டும்.

*

தமிழ்நாட்டில் இலக்கிய வெளியீடு நன்கு நடைபெற்றுவருகிறது. இலக்கியப் பிரச்சாரத்திற்காக ஓரிருவாரங்கள் இதற்கென ஒதுக்கி வைத்து வேலைசெய்தீர்கள். இது மிகவும் நல்லது. ஆனாலும் அங்கு நடைபெற்று வரும் இலக்கியப் பிரச்சார வேலையில் எனக்குத் திருப்தியில்லை. இலக்கியப் பிரச்சாரத்திற்கான நிரந்தரத் திட்டம் வேண்டும்.

*

ஆபாசச் சுவரொட்டிகள், சினிமா பாடல்கள் இவ்விஷயங்கள் பற்றி நகரங்களில் மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்த வேண்டும். இவ்வேலை உத்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் ஆகிய பகுதிகளில் நடைபெற்று வருகிறது. இதில் பெண்கள் சக்தி விசேஷமாகப் பயன்படும்.

*

கஸ்தூரிபா நிதி, சாந்தி சேனை வேலையைத் தங்கள் வேலையா ஏற்றுக் கொண்டுள்ளனர். இது பெரிய விஷயமாகும். நாம் அவர்களை சாந்தி சேனை வேலைக்கு நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

*

அகில இந்திய சர்வோதய சம்மேளனங்களுக்குத் தமிழ் நாட்டு ஊழியர்கள் மிகவும் குறைவாகவே வருகிறார்கள். வருபவர்களும் நடவடிக்கைகளில் கலந்துகொள்ள முடிவதில்லை. அதற்குக் காரணம் இந்தி நன்கு தெரியாததுதான். ஆகையால், நம் ஊழியர்கள் தினம் அரை மணி நேரம் இந்தி படிப்பதை ஓர் உபாசனையாகக் கருத வேண்டும்.

★

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

பாப்பாப்பாட்டு: ந. செல்லப்பன்.

## விந்தைப் பறவை

காகா என்றே கரைந்து வரும்
கரிய நிறமாய்ப் பறந்துவரும்
வேகங் கொண்டே விரைந்துவரும்
மேலே பறந்து திரிந்துவரும்

கூரை மேலே ஏறிவரும்
குறும்புச் செயல்கள் செய்துவரும்
சோறு தின்ன ஓடிவரும்
சுற்றத் தினரைக் கூட்டிவரும்

இருக்கும் உணவு சிறிதெனினும்
இனத்தை அழைத்தே அவ்வுணவை
விரும்பி அளித்துப் பகிர்ந்துண்ணும்
மேன்மை மிக்க பறவையடா.

காலை மலரும் வேளையிலே
காகா எனவே ஒலிசெய்து
வேலை செய்யத் தூண்டிவரும்
விந்தைப் பறவை காக்கையடா.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 4-வது சர்வோதய இலக்கிய விழா

வினோபாஜி நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாடெங்கும் ஒரே சமயத்தில் சில தினங்களுக்கு வீடு வீடாகச் சர்வோதய இலக்கியங்களைப் பரப்புவதில் எல்லாச் சர்வோதய ஊழியர்களும் ஈடுபட வேண்டுமென்று சொன்னார்.

செப்டம்பர் 11-ந் தேதி பாரதியார் அமரரான தினம், வினோபாஜியின் பிறந்த தினமும் அதே தான். காந்திஜியின் பிறந்த தினத்தை சர்க்கா ஜெயந்தியாகக் கொண்டாடுகிறோம். ஆகவே செப்டம்பர் 11-ந் தேதி பாரதி தினமாகவும் இருப்பது தமிழ்நாட்டின் விசேஷ பாக்கியம்.

இவ்வாண்டு செப்டம்பர் 11-ந் தேதி பாரதி தினம்—'வினோபா ஜெயந்தி' முதல், 18-ந்தேதி வரை ஒரு வாரத்திற்கு நான்காவது சர்வோதய இலக்கிய விழா கொண்டாட தமிழ்நாடு சர்வோதய மண்டல், தமிழ்நாடு சர்வோதய சங்கம், சர்வோதய பிரசுராலயம் மூன்றும் தீர்மானித்துள்ளன.

★

# காங்கிரஸ் செய்திகள்

## தமிழ்நாடு காங்கிரஸ் தேர்தல் அபேட்சைகள்

நடைபெற இருக்கும் பொதுத் தேர்தலில் சட்ட சபை பாராளுமன்றத் தொகுதிகளுக்குப் போட்டியிட விருப்பம் தெரிவித்து ஆகஸ்ட் 14 வரை சுமார் 500 பேர் த. நா. காங்கிரஸ் தேர்தல் கமிட்டிக்கு மனு சமர்ப்பித்துள்ளனர் என்றும், இன்னும் பல மனுக்கள் வரலாமென்று எதிர்பார்க்கப்படுவதாகவும் த. நா. காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ஒ. வி. அளகேசன் தெரிவித்துள்ளார். மொத்த சட்டசபை ஸ்தானங்கள் 205; பாராளுமன்ற இடங்கள் 41.

மனுக்களைப் பரிசீலிப்பதற்காக தேர்தல் கமிட்டி நியமித்துள்ள பார்வையாளர் குழு ஆகஸ்ட் 23 ந் தேதி சென்னையில் கூடும் என்றும் செப்டம்பர் 1 ந் தேதி முதல் 15 ந் தேதி வரை ஜில்லாக்களில் சுற்றுப் பயணம் செய்யும் என்றும் அவர் தெரிவிக்கிறார். அபேட்சகர்களின் இறுதிப் பட்டியல் அக்டோபரில் தயாராகி விடும். மனுக்கள் சேர்க்கப்படுவதற்கான கடைசித் தேதி ஜூலை 31.

காங்கிரஸ் அபேட்சகர் பற்றிய முழு விவரங்கள் நவம்பர் 15 ந் தேதி வாக்கில் வெளியிடப்படுமென அ. இ. காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவரெட்டி அறிவிக்கிறார்.

மதுரையில் அக்டோபர் 2ந் தேதி ஆரம்பமாகும் அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் தேர்தல் விஞ்ஞாபனம் முடிவு செய்யப்படும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.



### முதலமைச்சர்

வருகிற பொதுத் தேர்தலில் நமது முதலமைச்சர் காமராஜர் சாத்தூர் தொகுதியிலிருந்தே சட்ட சபைக்குப் போட்டியிடக் கூடும் என்று நம்பிக்கையான வட்டாரங்களிலிருந்து தகவல் வெளியாகியுள்ளது.



### நிதியமைச்சர்

நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் தமது கோவை மாவட்டத்திலிருந்து பாராளுமன்றத்திற்குப் போட்டியிடுவார் என்று தெரிகிறது. இதற்கு அவர் காங்கிரஸ் டிக்கட் கோரி மனுச் செய்து கொண்டிருக்கிறாராம்.



# தமிழக அரசின் புதிய கடன்

தமிழ்நாடு அரசாங்கம் 1972ம் வருஷத்திய 4·5 சதவீத கடன் ஒன்றை செப்டம்பர் 4ந் தேதியன்று வெளியிடுகிறது. கடன் எழுப்பும் தொகையின் மொத்தம் ரூ. 10 கோடி.

இந்தக் கடன் தொகை நீர்ப்பாசன வேலைகளுக்கும், தொழிலபிவிருத்தி வேலைகளுக்கும் பயன்படுத்தவும், ராஜ்ய மின்சார போர்டுக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் கடன் தரவுமே எழுப்பப்படுகிறது.

இப்போது எழுப்பப்படும் கடன் 1972ம் வருடத்திய 4·5 சதவீதக் கடன் எனப்படும். 1961 செப்டம்பர் 4ந் தேதி முதல் 9ந் தேதிவரை ஏற்றுக்கொள்ளப்படும். ரொக்கமாகவோ, செக்காகவோ தமிழ்நாடு அரசாங்கம் 1961ம் வருடத்திய இரண்டே முக்கால் சதவீத கடன் பத்திரங்களாகவோ இதைச் செலுத்தலாம்.

ரூ. 100 கடன் தொகை செலுத்த விண்ணப்பிப்பவர்கள் ரூ. 99·75 செலுத்தினால் போதும். ஏனைய மாநில அரசுகள் ரூ. 80 கோடி புதுக்கடன் எழுப்பியுள்ளன. தமிழ்நாடு எழுப்பியுள்ள கடன் ரூ. 10 கோடி தான் என்பது குறிப்பிடத்தக்கது.

சென்னை நகரிலுள்ள ரிசர்வ் பாங்கும், தமிழ்நாட்டிலுள்ள எல்லா ஸ்டேட் பாங்க் கிளைகளும், எல்லா சர்க்கார் கஜானாக்களும் இந்தக் கடன் தொகையை ஏற்றுக் கொள்ளும்.



# படித்தோம்-சொல்லுகிருேம்

## ஸ்ரீகதிரை மணி மாலை

[ ஆக்கியோர்: பரமஹம்ஸ தாசன், ஆத்ம ஜோதிப் பதிப்பகம், சாவல்பட்டி, இலங்கை - விலை 50 சதம் ]

'பார்க்குமிட மெல்லாம் நிறைந்து வையப் பாவலர்க்கு நற்பாட்டின் பொருளாய் நின்று, வார்க்கின்ருன் நல்லின்பம்; வையத்துள்ளோர் வனப்பிதயம் அனைத்தையு மொன்ருகத் தன்பால் ஈர்க்கின்ருன்; இயற்கையைத் தன் மேனியாக் கொண்டியங்குகிருன்; எழிற் கூத்தால் இயக்குகின்ருன்' என்று பாராட்டப் பெறுகிற அழகுத் தெய்வமான முருகப் பெருமானைப் பற்றி-அவன் திருவிளையாடல்களைப் பற்றி அருணகிரியாரும், அண்ணுமலை ரெட்டியாரும் ஏராளமான பாடல்கள் பாடியிருக்கிருர்கள். இவர்களுக்கு முன், புலவருள் புலவர் எனப் போற்றிய நக்கீரர் 'திருமுருகாற்றுப் படை' என்ற தனியொரு நூலே இயற்றி பக்தர்களை முருகன் அருள் பெற ஆற்றுப்படுத்தியிருக்கிருர். அது இன்றும் தனிப் பெருஞ் சிறப்புடன் நின்று நிலவுகிறது – என்றும் நிலவும். பிற்காலத்திலும் முருகப் பெருமானைப் பற்றி வெளிவந்துள்ள பாடல்கள் எண்ணிலடங்கா.

உலகில் அழகும், மணமும், இயற்கையும் நிலை பெற்றிருக்கும் காலம் வரை மன்னுலகப் பொருளையெல்லாம் கடந்தொளிரும் உணர்வுப் பெரும்பதமான முருகனும் தனிப்பெரும் சக்தியாக நின்ருெளிர்வான். குன்றுதோருடும் அக்குமர வடிவேலின் கோலத்தை ஆடிப்பூர உற்சவத்தின் போது இலங்கைக் கதிர்காமத்தில் கண்டு, அவனருளிலே-அந்த ஆனந்த வெள்ளத்திலே மூழ்கித்திளைப்போர் கோடானுகோடி. ஈழந்தந்த கவிஞர்களின் முன்னணி வரிசையில் நிற்கும் கவிஞர் பரமஹம்ச தாசர் பல ஆண்டுகளுக்கு முன் முருக பக்தியில் திளைத்துத் தாம் பெற்ற அனுபவங்களைக் கவிதைகளாக வடித்துக் 'கதிரைமணி மாலை' யாக்கித் தந்திருக்கிருர்.

'பழியால் உலகம் தூற்றிடவோ, பாவி இவளைப் பெற்றேனே' என்று நற்ருய் இரங்குவதும், 'கூவாய் குயிலே' என்று வேண்டுவதும் இலக்கியச் செறிவுடையன. பொதுவாக, கதிரை மணிமாலையில் மணமும் அழகும் உள்ள மலர்கள் பல உள்ளன.





## கோவலன் மாதவிபால் மனம் இழந்த தேன்?

[ ஆசிரியர்: சி. என். நாச்சியப்பன், பொன்னழகி பதிப்பகம்-காரைக்குடி: விலை, ரூபாய் ஒன்று. ]

நெஞ்சையள்ளும் செஞ்சொற் காப்பியமான சிலப்பதிகாரத்தை அடியொற்றி எழுந்த நான்கு கட்டுரைகளும், அம்புவிக்கோர் புலவனென அவதரித்த செந்தமிழக் கம்பன் நயந்தளித்த காவியத்தின் அடியொற்றி எழுந்த நான்கு கட்டுரைகளும், ஏடறியாச் செவி வழிக் கதைகளின் அடிப்படையில் எழுந்த இரண்டு கட்டுரைகளும் ஆகப் பத்துக் கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. முதற் கட்டுரையின் தலைப்பே புத்தகத்தின் தலைப்பாயும் அமைந்திருக்கிறது.

ஆசிரியர் சிலப்பதிகாரத்திலும், இராம காதையிலும் உள்ளந் தோய்ந்து, செவிவழிச் செய்திகள் சிலவற்றைக் கேட்டுச் சிந்தை மகிழ்ந்து, அவற்றைப் பற்றிச் சிந்தித்துச் சிந்தித்து, அவர் பெற்ற இன்பத்தை நாமும் பெறுமாறு செய்ய முயன்றிருக்கிருர். அம்முயற்சியில் அவர் வெற்றியும் பெற்றுவிட்டார். ஆசிரியரின் சிந்தனையில் தெளிவிருக்கிறது – அவரது செந்தமிழ் நடையில் இனிமை இருக்கிறது.

'கோவலன் மாதவிபால் மனம் இழந்ததேன்?' என்ற இந்தப் பூந்தோட்டத்தில் உள்ள இலக்கிய மலர்களைத் தமிழக மக்கள் கண்டு தொட்டு நுகர்ந்து பயன் பெறுவதன் மூலம் ஆசிரியருக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பார்களாக.

## சமூகத் தொண்டன் (ஆண்டு மலர்)

[ விலை ரூ. 2-50. அலுவலகம் சுண்டிக்குளி—இலங்கை ]

இலங்கை சுண்டிக்குளியிலிருந்து வெளிவரும் 'சமூகத் தொண்டன்' மாத இதழின் இவ்வருடத்திய ஆண்டுமலரில் ஈழத்திலே, புகழ்பெற்ற ஈழத் தமிழ் எழுத்தாளர்களும், தாய்த் தமிழகம் என்று அவர்களே போற்றுகிற நமது தமிழகத்து எழுத்தாளர் சிலரும் எழுதியிருக்கின்றனர். நல்லதாளில்—ஏராளமான பக்கங்களில் மலர் அச்சிடப்பட்டிருக்கிறது. ஈழத் தமிழகம் தமிழர்களுக்கு வழங்கியுள்ள இனிய அரிய கலைப் படைப்பு இந்த ஆண்டு மலர்.

– சாமிபழனியப்பன்




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

| ஏடு 26 | 20—8—1961 | வாரம் 41 |
|---|---|---|

# தலையாய கடமை

நாடு சுதந்திரம் பெற்ற பிறகு நாட்டின் அபிவிருத்திக்கான வகையில் திட்டங்கள் வகுத்து வெற்றிகரமாக முன்னேறி வருகிறோம். நாட்டை முன்னேற்றுவது அரசியலார் கடமை என்றெண்ணி மக்கள் சும்மா இருந்துவிட முடியாது. சுதந்திர நாட்டில் நமக்குள்ள பொறுப்பை—கடமையை! நாம் உணர வேண்டும். நாட்டிலே பல கட்சிகள் இருக்கலாம்—பல்வேறு கொள்கைகள் இருக்கலாம். எனினும், நாடு அபிவிருத்தி அடையவேண்டும் என்பதிலே யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்கமுடியாது. எனவே, மூன்றாவது திட்டம் நிறைவேற ஒன்றுபட்டு உழைப்போம் என்ற நமது மதிப்பிற்குரிய முதலமைச்சர் காமராஜர் அவர்களின் வேண்டுகோளை ஏற்று ஒத்துழைக்க முன்வருதல் இந்நாட்டின் நல்வாழ்வில் அக்கறையுடையவர்களின் தலையாய கடமையாகும்.

# திருமதி குஞ்சிதம் மறைவு

விடுதலை நாளிதழ் ஆசிரியர் தோழர் குருசாமி அவர்களின் துணைவியார் திருமதி குஞ்சிதம் அம்மையாரின் மறைவு தமிழகச் சமூகப் பணியாளர் உள்ளங்களைத் திடுக்கிடச் செய்துவிட்டது. திருமதி குஞ்சிதம் அம்மையார் சாதி ஒழிப்பிலும், சமூக சீர்திருத்தத்திலும் சாந்துணையும் தீவிர அக்கறை காட்டிவந்தார். தோழர் குருசாமி அவர்களின் இல்வாழ்விலும், பொது வாழ்விலும் அவருக்கு உற்ற துணையாக இருந்து உண்மையில் நாட்டமும், கொள்கையில் உறுதிப்பாடும் கொண்டு திகழ்ந்தார்.

அறிவுத் தெளிவு மூலமே இந்நாடு முன்னேற முடியும் என்பதிலே இவர் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டு, கடந்த 20 ஆண்டுகளாகத் தமிழகக் கல்வித் துறையில் பணியாற்றினார். அண்மையில்தான் சென்னை மாநகராட்சி மன்றம் இவரைக் கல்வி அதிகாரியாகப் பெற்றது. பெற்ற சில மாதங்களிலேயே இவர் மறைவுற்றது மிகவும் வருந்தத்தக்கது. திருமதி குஞ்சிதம் அம்மையாரின் மறைவினால் அவர்மக்கள் இருவரும் அருமை அன்னையாரை இழந்தனர். தோழர்குருசாமி தனது ஆருயிர்த் துணைவியை இழந்தார். ஆருயிர்த் துணைவியை இழந்து வருந்தும் தோழர் குருசாமிக்கு யாரே ஆறுதல் கூற வல்லார்?

★

# விழா வாழ்த்துக்கள்

சிவாஜி வெள்ளி விழாவின் வெற்றிக்கு எனது வாழ்த்துக்கள். தமிழ் இலக்கியத்திற்கு சிவாஜி மகத்தான தொண்டுபுரிந்து வந்துள்ளது. நமது கிராம வாழ்க்கையின் பிரச்னைகளை அலசி ஆராய்ந்து வருகிறது. மேலும் தமிழகத்திற்குச் சிறந்த பணிபுரிந்து வருவதாக.

—ரா. நடராஜன், செயலாளர், மேட்டூர் கெமிகல்ஸ்

தங்கள் ஓய்வற்ற, தன்னலமற்றதொரு திருப்பணியினால் சிவாஜி மகத்தானதொரு நிலையை அடையச் செய்துள்ளீர்கள். பொன்விழா, வைர விழா, நூற்றாண்டு விழாக்களும் நடைபெறுவதாக.

—சி. ராமனாதன், கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்

கடந்த கால் நூற்றாண்டாக பொதுத் தொண்டு, குறிப்பாக பத்திரிகைத் துறைக்குத் தாங்கள் ஆற்றி வருகிறீர்கள். மனித வாழ்வின் பல்வேறு இன்ப துன்பங்களையும், பிரச்னைகளையும் அலசி ஆராய்வதில் தாங்கள் காட்டியுள்ள நுட்பமான ஆற்றலைப் பெரிதும் நாங்கள் போற்றி வந்திருக்கிறோம். மனித சமுதாயத்திற்கும் இலக்கியத்திற்கும் மேலும் பணிபுரியத் தங்களுக்கும் சிவாஜிக்கும் பல்லாண்டு கூறுகிறோம்.

ஆ. வெ. ராமச்சந்திரன், கரூர்

காமராஜரின் ஆகி வந்த கை நடத்துவதால் சிவாஜியின் வைர விழாவும் பிளாட்டினம் விழாவும் விமரிசையாக நடக்கப்போகின்றன. நீயும் இருந்து அதைக் காணப் போகிறாய். அப்பொழுது நீ மிகவும் உயர்ந்துவிடுவாய். இப்பொழுது இருப்பதைவிடப் பன்மடங்கு உயர்ந்தாலும் குட்டையானவர்களுக்கு உள்ள இளமையும், இளமைத் தோற்றமும் உன்னைக் கைவிடாமல் ஜாம்ஜாம் என்று உன்னைக் கர்மவீரனாகவும், தத்துவ சீலனாகவும் உயர்த்திக் காப்பாற்றிக் கொண்டிருக்கும்.

—தி. ஜானகிராமன், சென்னை

இந்தப் பருவ வயதை அடைவதற்குள் சிவாஜி ஆற்றிய பணிகளை நினைத்துப்பார்க்கின் ஆச்சரியமுண்டாகிறது. வாரந்தோறும் வெளியிடும் சுவைமிக்க பாக்களும் இலக்கிய ஆராய்ச்சிகளும் எங்கள் நினைவில் என்றென்றும் 'சிவாஜி'யை நிலையுறச் செய்யும் என்பதில் ஐயமுண்டோ?

—கே. வி. நடராஜன், கரூர்

நாடு நனிவாழ நாம்வாழ்வோம் என்றெண்ணிப்
பாடுந் திருக்கவிஞர் பண்பழகர்—நீடுபுகழ்
என்கவிஞர் சீதாராம் என்னிரண்டாம் பாரதியே
என்றும் இதுவே இலங்கும்.

புலவர் முத்து வெங்கடேசன்

நம் சிவாஜி தொடர்ந்து, இடையறாது இப்போது செய்துவரும் முறையிலேயும், கொண்ட கொள்கையைக் கைவிடாது பின்பற்றி நடந்தும், எழுதிவரும் சீரிய தொண்டை ஆற்றிவரவும் வாழ்த்துகிறேன். சுதந்திரத்தின் பலனை நாட்டின் எல்லா மக்களும் அடையும் வகையில் வழிகாட்டியாக விளங்குமாக.

—பி. வெங்கடாசலம் பிள்ளை, அரியலூர்

'சிவாஜி' வாரப்பதிப்பு

**புதிய தொலைபேசி 2158**

# தொழில் வளரும் தமிழகம்

## தந்திக் கம்பங்கள் உற்பத்தி

தந்திக் கம்பங்கள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையொன்றை மத்திய அரசாங்கம் கூடியசீக்கிரம் மேட்டூரில் நிறுவக்கூடும். மேட்டூரில் நிறுவ இருக்கும் இத்தொழிற்சாலைக்கான இடத்தை சல்கத்தா தபால் தந்தி தொழிற்சாலை ஜெனரல் மானேஜர் திரு. எம். பி. சாரங்கபாணி பார்வையிட்டார்.

## நீலகிரியில் தைலத்தொழிற்சாலை

40 லட்ச ரூபாய் செலவில் வெட்டி வேர், மெந்தால் போன்ற தைலங்களைத்தயாரிக்கும் தொழிற்சாலை நீலகிரியில் மூன்றும் திட்டகாலத்தில் நிறுவப்படும்.

உதக மண்டல கொய்னா இலாகா டைரக்டர் திரு. ஏ. ஒய். சாமி இதுபற்றி மத்திய வைத்திய செடி இலாகாவினருடன் கலந்தாலோசித்தார்.

## கோவையில் அச்சுக்கூடம்

3-வது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் கோவையில் டெல்லி சர்க்கார் அச்சுக்கூடம் ஒன்று ஆரம்பிக்கப்படும். இதற்கு ஒருகோடியே 43 லட்சம் ரூபாய் செலவிடப்படும். இதற்காக கோவையில் 133 ஏகர் நிலம் வாங்கப்பட்டுவிட்டது.



---

## திருச்சி டி. மு. கோர்ட்டு
O S 239/61

தி. தா. கொண்டயம்பேட்டை வெங்கிட்டராவ் மனைவி கெங்காபாய் —வாதி

தி. தா. புங்கனூர் பூவார் உடையார் மகன் P. செங்காய உடையார்

—பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் நோட்டுக் கடன் பத்திரப்படி ரூ 1520-ம் பின்வட்டி சிலவும் கிடைக்க தாவாசெய்து 26-8-61ல் தாங்கி, அன்று பிரதிவாதி தன் கட்சியை தெரிவிக்காவிடில் தாவா Exparte ஆக முடிவு செய்யப்படும்.

S. கஸ்தூரிரெங்கன்
அட்வகேட்,

2 | 4467 | 111

# உழவர்களே

இந்த விளம்பரத்தினுல் உங்களுக்குப் பல லாபங்கள் உள்ளன
படித்து...கத்தரித்தெடுத்து...வைத்துக்கொள்ளுங்கள்.

செழிப்பான நெற்பயிரைச் சாகுபடி செய்ய ராலீஸார் உங்களுக்குக் காண்பித்து உதவுகின்றனர்.

உரங்கள் உபயோகித்தீர்களானுல் உங்கள் நிலம் அதிகப்படியான விளைச்சலை—சரிவர—கொடுக்கும். அனுபவமுள்ள ராலீஸ் திறமையாளர்கள் ஆயிரக்கணக்கான பரீட்சைகளை நடத்தி, எங்ஙனம் நெற்பயிருக்கு உரங்கள் போட்டு வளமிடவேண்டுமென்பதை வயல்களிலேயே நடத்திக்காட்டி நிரூபித்துள்ளனர். அவர்களின் திறமையான வேலையின் பயனுல்தான் விரைவாகவும், நம்பகமாகவும், சிக்கனமாகவும் செழிப்பான நெற்பயிரை அறுவடை செய்ய உங்களுக்கு வழி கிடைத்து உள்ளது.

உபயோகிக்கும் முறை: உங்கள் நிலத்திற்கு நீங்கள் வழக்கமாகப் போடும் எருவுடன் மற்றும் பச்சை இலை உரத்துடனும் 30 முதல் 60 ருத்தல் வரையுள்ள நைட்ரஜனும் அதோடு 20 முதல் 40 ருத்தல் வரையுள்ள பாஸ்போரிக் ஆஸிட்டும் சேர்த்து உங்கள் நிலத்தின் ஒவ்வொரு ஏக்கருக்கும் போடுங்கள். இங்ஙனம் உரங்கள் போடுவதால் உங்கள் நெற்பயிரின் விளைவு 1½ முதல் 2 பங்கு கூடுதல் ஆகும்.

மேலும் இவைகளோடு கூட ஒவ்வொரு ஏக்கருக்கும் 20 ருத்தல் பொட்டாஷ் போட்டீர்களானுல் நெற்பயிரின் தரம் மேலும் நல்லதாக்கப்படும்.

இந்த உரங்கள் உங்கள் வட்டாரத்திலுள்ள எந்த விதமான நிலத்திலும், சீதோஷ்ண ஸ்திதியிலும் உரங்களின் கலவைகளைத் தாரதம்மியப்படுத்த மிகவும் சிறந்தது.

உங்கள் நிலத்திற்குவேண்டிய சரியான "மரம் மார்க்" உரங்களைப்பற்றிய விவரங்கள் அறிய உங்கள் அருகாமையிலுள்ள வியாபாரியைக் கேளுங்கள்.




## ராலீஸ் இந்தியா லிமிடெட்

320, லிங்கி செட்டி தெரு, சென்னை-1.




# இருளும் ஒளியும்

ஷண்முகர் காலைக் கும்மி என்ற தலைப்பில் அழகான காலைப்பாட்டு ஒன்றை அருளியிருக்கிறார், அருட்பிரகாச வள்ளலார் என்று போற்றப்படும் இராமலிங்க ஸ்வாமிகள்.

பொழுது புலர்ந்தது
பொற் கோழி கூவிற்று
பொன்னனை வேலரே
வாரும்.........

என்று தொடங்கும் அந்தப் பாடல் வள்ளலாரின் அருள் உள்ளத்துக்கு மட்டுமல்ல—கவி இதயத்துக்கும் கட்டியங் கூறுவதாகும். 'பொற் கோழி' என்ற பிரயோகத்துக்கு ஈடு இணை கிடையாது. எனக்கு விவரம் தெரிந்த நாளிலிருந்து இந்த முதலடியை நெஞ்சுக்குள் முணுமுணுக்காத நாளே இல்லை. அப்படி அதன்பால் நான் மோகித்துப் போயிருக்கிறேன். பின்னளில் ஒளியையும் இருளையும் பற்றி நான் பாடியுள்ள பாடல்களில் நானே வியக்கும்படி அமைந்துள்ளவை சில உண்டு. அவற்றிற்கெல்லாம் ஆதார சுருதி இந்த 'பொற் கோழி' பிரயோகம் தான்.

ஒளி வந்ததும் உலகம் தங்க மயமாகித் திகழ்கிறது. கதிர் வருகைக்குக் கட்டியங் கூறும் சேவலின் பொன்னிற மேனியழகும் கவிஞனுக்கு நினைவு வருகிறது. எல்லாம் சேர்ந்து 'பொற் கோழி' என்ற பிரயோகம் பிறந்து விட்டது. வெறும் மோனை யழகுக்காக மட்டும் வள்ளலார் இதைச் சொல்லியிருக்கமாட்டார் என்பது நிச்சயம்.



பொழுது விடிந்தால் பொருள் தேடி ஓடிக்கொண்டிருப்பது தவிர வேறு ஒரு வேலையும் இல்லாத நமது வாழ்வுண்மையை நினைக்கும் போது, 'பொற் கோழி' என்டது பொன் என்கிற கோழிதானே என்றும் சில சமயம் தோன்றுகிறது.

பொழுது விடிந்தால் அன்றையப் பொழுதை எப்படிப் போக்குவது என்ற ஆயிரங்கோடி கவலைகளும் நமது நெஞ்சில் நிறைந்து விடுகின்றன. பொழுது மறைந்து இரவு வந்தால் தான் நமது மனதில் நிம்மதி வருகிறது. எல்லாக் கவலைகளையும் நாளைக்கு ஒத்திப் போட்டு விட்டு உறங்கப் போய்விடுகிறோம். நளாயினியைப்போல 'பொழுதே விடியாமற்போ' என்று சாபம் கொடுக்கும் சக்தி நமக்கில்லையே என்ற ஏக்கம்கூட உண்டாகிறது. வெளியில் ஒளிவந்தால் மனத்தில் இருள். வெளியில் இருள்வந்தால் நெஞ்சில் ஒளி. விசித்திரமான—பயங்கரமான உண்மை. எனவே பொழுது விடியும் சேதியைக் கூறும் கோழியும்– விடிந்தால் தொல்லையென்று நம்மை எச்சரிக்கும் பொன்னும்-இரண்டுமே பொற்கோழிகள் தாம்.



இருள் நிறைந்த குகையில் போட்டு அடைத்து வைத்தாலும் கூட ஒளியின் வருகை கோழிக்கு எப்படியோ தெரிந்து விடும். உதயத்துக்கு முன்பு அது எப்படியும் கொக்கரக்கோ என்று கூவத்தவறுவதில்லை. வெளிச்சத்தில் கொண்டு வந்து கறப்பதை விட இருட்டாக இருக்கிற இடத்தில் கறந்தால் பசுக்கள் அதிகமாகப் பால் கொடுக்கின்றன என்று அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். கோழிகள் இருட்டில்தான் அதிகம் முட்டையிடுகின்றனவாம்.

இருட்டுக்கு என்னதான் பொருள் என்பதைக் கண்டுபிடிக்க இதாலிய விஞ்ஞானிகள் முயற்சி செய்வதாகப் பத்திரிகைச் செய்தி வந்திருக்கிறது. அதற்காகப் பூமிக்கடியில் குடைந்துகொண்டு அதன் கர்ப்பத்துக்கே போய்க் கொண்டிருக்கிறார்களாம். இருட்டில் பசுக்கள் அதிகம் பால் கொடுப்பது, கோழிகள் அதிக முட்டையிடுவது, இருட்டறையில் அடைத்த சேவலும் ஒளிரேகையை உணர்ந்து கூவுவது – இந்த மாதிரி இருட்டின் சிறப்புகளுக்கெல்லாம் என்ன காரணம் என்பதைக் கண்டுபிடிக்கப் போகின்றார்களாம்.

அணு சக்தியின் ஆட்சி அதிகமாகி உலகம் அபாயத்தில் இருந்து வரும் இந்த நாளில் மனிதன் ஒளியில் வாழ்வதைவிட இருட்டில் வாழ்ந்தால் இந்த அணு சக்திக்குத் தப்பி வாழ முடியுமென்ற எண்ணம் இந்த இதாலிய விஞ்ஞானிகள் மூளையில் உதித்திருப்பதும் இந்த ஆராய்ச்சிக்கு ஒரு காரணமாம்.

ஒரு பக்கம் இந்த உலகை விட்டு வான வெளியில் வேறு மண்டலங்களுக்கு மனிதன் குடியேற வழியுண்டா என்று முயற்சி செய்கிறார்கள். இன்னொரு பக்கம் தரை மட்டத்திலிருந்து பூமியைக் குடைந்து கொண்டு உள்ளே இருட்டில் வாழ இடமுண்டா என்று பார்க்கின்றார்கள். எப்படியும் இந்த உலகமும் வெளிச்சமும் வாழ யோக்யதை இல்லாத நிலைக்கு வந்து விட்டதென்பது விஞ்ஞானிகளின் கருத்துப் போலும். இந்த உலகத்தை இப்படிக் குட்டிச் சுவராக்கி வருபவர்களும் அவர்கள்தாமே!



புரியாத விஷயத்தைக் குறிப்பிடும்போது அது 'ஆண்டனுக்கே வெளிச்சம்' என்று சொல்லுகிறோம். உண்மையும் அதுதான். வெளிச்சம் ஆண்டவனுக்குத்தான். நமக்கு இருட்டுதான் சொந்தம் என்பதை இறுதியாக விஞ்ஞானிகளும் நிரூபித்து விடுவார்கள் போலிருக்கிறது.



அறியாமையை இருட்டுக்கும் அறிவை ஒளிக்கும் உவமை கூறுவர். இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வழி தேடுகிறார்கள் மெய்ஞ்ஞானிகள். இதாலிய விஞ்ஞானிகள் வெளிச்சத்திலிருந்து இருட்டுக்குப் போகிறார்கள், இருட்டைப் பற்றி நமக்கு இருந்து வரும் இருளைப் போக்கி ஒளி காணத்தான். ஒளியை ஒளியில் தேடுவதைவிட இருட்டில் அதைத் தேடுவது நல்ல காரியம்தான். ஒளியில்தான் நமக்கு எல்லாம் இருட்டாக இருக்கிறதே.

'அல்லினுள் பெருஞ்சுடர் காண்பவர் அன்னை சக்தியின் மேனிநலங் கண்டார்' என்கிறார் பாரதி. இதாலிய விஞ்ஞானிகள் இருளின் மேனி நலத்தைக் கண்டறிவதன் மூலம் சக்தி ஒளியின் திவ்ய தரிசனம் பெறுவது சிறப்பே.



# தமிழகப் பள்ளிகளில் டெலிவிஷன் மூலம் கல்வி

தமிழ்நாட்டுப் பள்ளிச் சிறுவர்களுக்கு டெலிவிஷன் மூலம் கல்வி கற்பிப்பது பற்றி அமெரிக்காவில் நமது நிதியமைச்சர் பேச்சுவார்த்தை நடத்தியதாகச் செய்தி வெளியாயிற்றல்லவா? 'டெலிவிஷன் மூலம் கல்வி' என்பது பற்றி திரு. வ. உ. சி. சுப்பிரமணியம் எழுதிய கட்டுரையை இங்கு வெளியிடுகிறோம்.

தமிழ் நாட்டுப் பள்ளிப் பிள்ளைகள் ஐந்து லட்சம் பேருக்கு ஓராண்டு முழுவதுக்கும் நாள்தோறும் பகல் உணவு வழங்க 'அமைதிப் பணிக்கு உணவு' என்னும் அமெரிக்கத் திட்டத்தின் கீழ் தமிழ் நாட்டுப் பிள்ளைகளுக்கு 2 லட்சம் டாலர் (ஏறக்குறைய ஒருகோடி ரூபாய்) பெறுமான பால்பொடி, கோதுமை மாவு, சோளமாவு முதலியன நன்கொடையாகக் கிடைக்கும்.

மற்றொரு சிறந்த கல்விப்பணி தமிழ்நாட்டிலுள்ள 30 லட்சம் பள்ளிச் சிறுவர்களுக்குக் கல்வி புகட்ட டெலிவிஷன் முறையைப் பயன்படுத்தவும் முயற்சி யாகும். இதன்மூலம் தமிழக மாணவர்கள் டெலிவிஷன் துணையுடன் கல்வியில் சிறந்தோங்க வழிபிறக்கும் என்பதில் ஐயமில்லை. விமானம் மூலம் டெலிவிஷன் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பும் முறை இந்தியாவுக்குப் பயன்படும் என்றும் நம்பிக்கை தெரிவிக்கப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் கல்வியறிவூட்டும் 50 டெலிவிஷன் நிலையங்கள் உள்ளன. பெரும்பாலானவற்றின் தேசியத் தலைமையகம் நியூயார்க் நகரில் இருக்கின்றன. அங்குள்ள கல்வி டெலிவிஷன் நிலையங்களில் ஒன்று தேசிய டெலிவிஷன்–ரேடியோ கல்வி நிலையம், கல்வி, செய்தி, பண்பாடு ஆகியவை பற்றிய நிகழ்ச்சிகளை 2 கோடி அமெரிக்க மக்கள் பார்ப்பதாக அந்நிலையம் அறிவிக்கிறது.

இன்று தனியாருக்குச் சொந்தமான 544 டெலிவிஷன் நிலையங்கள் அமெரிக்காவில் உள்ளன. அவை வாணிப நோக்கத்தோடு இயங்குகின்றன. ஆனால் 242 சமுதாயங்களில் ஒவ்வொன்றிலும் டெலிவிஷன் நிலையம் ஒன்றைக் கல்விக்கு ஒதுக்கி வைக்க, 1952-ம், மத்திய அரசாங்கச் செய்திப் போக்குவரத்துக் குழு ஏற்பாடு செய்தது. கல்வி டெலிவிஷன் நிலையங்கள் தனியாருக்குச் சொந்தமானவையாய் இருக்கக் கூடாது. அவை லாப நோக்கங் கருதி நடத்தப்படலாகாது. விளம்பரம் செய்வோர், நேரடியாகவாவது, மறைமுகமாகவாவது அவற்

படத்தில்...

1. டெலிவிஷன் வகுப்பறை ஆசிரியர் பணிமனையை அமைச்சர் டாக்டர் பி. வி. கேஸ்கார் ஆரம்பித்து வைக்கிறார்.

2. பௌதிக ஆசிரியர் சோதனை நடத்திக் காட்டுகிறார்.

3. இன்னொரு சோதனைக் காட்சியின் அண்மைத் தோற்றம்.



# தமிழகப் பள்ளிப் பிள்ளைகளுக்கு...

தில் ஆதிக்கம் செலுத்தலாகாது என்பது ஆசிரியர்கள், நகரத் தலைவர்கள், சட்டசபை உறுப்பினர்கள் ஆகியோரது எண்ணம்.

## முதல் கல்வி-டெலிவிஷன்

1953 ல் டெக்ஸாஸ் மாநிலத்திலுள்ள ஹூஸ்டன் பல்கலைக் கழகத்தில் கல்வி டெலிவிஷன் நிலையம் முதன்முதலாக நிறுவப்பட்டது. கலைகள், விஞ்ஞானம், பொது விவகாரங்கள் ஆகியவை பற்றிய நிகழ்ச்சிகளும், வகுப்புக்குச் செல்லாமல் டெலிவிஷன் திரையைப் பார்த்துக் கல்லூரிப் பாடங்களைக் கற்பிக்கும் நிகழ்ச்சிகளும் ஆங்கிலயத்தில் நடைபெறுகின்றன.

சிக்காகோ, சான்பிரான்சிஸ்கோ, பாட்ஸ்பர்க் நியூ௵ர்லியன்ஸ், செயிண்ட் லூயிஸ் முதலிய பெரிய நகரங்களில் ஆசிரியரும் நகரத் தலைவர்களும் சேர்ந்து குழுக்கள் அமைத்துக் கல்வியூட்டும் நிகழ்ச்சிகள் நடத்தும் டெலிவிஷன் நிலையங்கள் நிறுவியுள்ளார்கள்.

1948–ம் ஆண்டுக்குப் பின் 125 கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் டெலிவிஷன் மூலம் மாணவர்களுக்குப் பாடங்கள் கற்பித்துள்ளன.

## பாலர் நிகழ்ச்சிகள்

தேசிய டெலிவிஷன் கல்வி நிலையமும் குழந்தைகளுக்குரிய கல்வி நிகழ்ச்சிகளை நடத்துகிறது. அது தன் பணியை விரிவுபடுத்தத் திட்டம் வகுத்துள்ளது. அடுத்த ஆண்டுக்குள் ஐம்பத்தாறு நிலையங்கள் நிகழ்ச்சிகள் நடத்தத் தொடங்கிவிடும். வேறு 28 நகரங்கள் கல்வி டெலிவிஷன் நிலையம் நிறுவ ஏற்பாடு செய்துகொண்டிருக்கின்றன. இன்னும் சில ஆண்டுகளில், அமெரிக்காவிலுள்ள 100 பெரிய நகரங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு கல்வி டெலிவிஷன் நிலையமாவது இருக்கும். 50 சிறு நகரங்களிலும் கல்வி டெலிவிஷன் நிலையங்கள் திறக்கப்படலாம்.

1961 இலையுதிர் காலத்தில் விமானத்தின் மூலம் கல்வி டெலிவிஷன் நடத்த ஃபோர்டு அறநிலையம் திட்டம் வகுத்துள்ளது. 50 லட்சம்பேர் அதைக்காண வாய்ப்பு ஏற்படும். ஃபோர்டுவேயின் நகரத்திற்கு மேலே வட்டமிட்டுக் கொண்டு பறக்கும் விமானத்திலிருந்து 13 ஆயிரம் பள்ளிக்கூடங்களுக்கும் கல்லூரிகளுக்கும் கல்வி நிகழ்ச்சிகள் பரப்பப்படும். வருங்காலத்தில் டெலிவிஷன், கல்வி வளர்ச்சிக்குப் பெருந்துணையாக விளங்கும் என்பது அமெரிக்க ஆசிரியரது உறுதியான எண்ணம்.



## இது செய்தி

தமிழ் நாட்டில் டெலிவிஷன் மூலம் பள்ளி போதனைக்கு ஏற்பாடு செய்வதில் மாநில அரசாங்கம் தீவிர முயற்சி எடுத்து வருகிறது. நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் நமது மேனாட்டுச் சுற்றுப் பயணத்தின்போது மேற்கொண்ட முயற்சியின்படி, தமிழ் நாட்டில் டெலிவிஷன் மூலம் கல்வி போதனை தருவது சம்பந்தமாக அமெரிக்க டெலிவிஷன் கார்ப்பொரேஷன் ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்திருக்கிறது. இது, தமிழக அரசாங்கத்திற்கு வந்திருக்கிறது. இவர்கள் தற்போது இதுபற்றித் தீவிரமாகப் பரிசீலனை செய்து வருகிறார்கள்.



## இலவச ஹோமியோ-வைத்திய சேவை

மதுரைக்கடுத்த டி. கல்லுப்பட்டி காந்திநிகேதன் ஆச்ரமத்தில் கும்பகோணம் இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட் நிலயத்தினர் மூன்று நாட்களுக்கான இலவச ஹோமியோபதி வைத்திய சேவை முகாமை நடத்தினர். ஹோமியோபதி வைத்தியத்தைச் சிறந்த முறையில் பரப்பிவருபவரும், கும்பகோணம் இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட் இயக்குனருமான டாக்டர் வி. ஆர். மூர்த்தியின் சேவையை காந்திநிகேதன் ஆசிரம நிருவாகி திரு. ஆர். குருசாமி பாராட்டினார். மூன்று நாட்களிலும் மேற்படி இலவச வைத்திய முகாமில் சுமார் 2,500 ஏழைகள் சிகிச்சையும், இலவச மருந்தும் பெற்றனர். முகாம் இறுதியில் எஞ்சிய மருந்துகள் அனைத்தையும் காந்திநிகேதன் ஆசிரமத்திற்கே இலவசமாகக் கொடுத்து வருவதாக டாக்டர் வி. ஆர். மூர்த்தி அறிவித்தார்.

அவர் வழங்கிய மருந்துகளைக் கொண்டு ஆசிரமத்தில் நிரந்தர ஹோமியோபதி மருத்துவசதி ஏற்படுத்தலாம் என்று ஆசிரமத்தினர் அறிவித்தனர்.



## இலவச வைத்திய வசதி

இன்ஷூரன்சு செய்த தொழிலாளர் குடும்பங்களுக்கு இலவசமாக வைத்திய உதவி அளிக்கும் திட்டம், கடந்த 15-ந் தேதி சுதந்திர தினம் முதல் அமுலுக்கு வந்துள்ளது.

இதையொட்டி, திருச்சி வட்டாரத்தில் "நடமாடும் ஆஸ்பத்திரி" வரும் நேரங்களில் மாறுதல் செய்யப்பட்டுள்ளது. திருச்சி செம்பட்டில் ஒவ்வொரு நாள் காலை 7 மணி முதல் 10 மணி வரையிலும், எடமலைப் பட்டி புதூரில் மாலை 3 மணி முதல் 5-30 மணி வரையிலும் நடமாடும் ஆஸ்பத்திரி நிற்கும்.



## நாகநாதர் ஆலய மஹா கும்பாபிஷேகம்

திருச்சிராப்பள்ளி ஸ்ரீ ஆனந்த சமேத ஸ்ரீ நாகநாத சுவாமி ஆலய அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 24—8—61 வியாழக்கிழமை காலை 7–30 மணிக்கு மேல் 8–30 மணிக்குள் நடைபெறும். இதையொட்டி மாலை மகாபிஷேகமும், இரவு திருவீதி உலாவும் நிகழ்வுறும்.



(ஆம் பக்கத் தொடர்ச்சி)

மொழிப் பதங்களும், ஆங்கில விஞ்ஞானப் பதங்களும் பயன்படுத்தப்படவேண்டும். இத்தகைய 'இரட்டைப் பதங்கள்' அடுத்த சில ஆண்டுகளுக்கு அவசியமே; ஏனென்றால், கல்லூரிகளில் ஆங்கிலப் புத்தகங்களையும், பிராந்திய மொழிப் புத்தகங்களையும் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. இரு மொழிப் பதங்களையும் பயன்படுத்துவதால் ஸ்தல மொழி வளரும்.

## பிராந்திய மொழிப் பதங்களின் அவசியம்

பள்ளிகளில் சொந்த மொழிகளிலேயே கல்வி கற்பதில் பல நன்மைகளிருக்கின்றன; பிரதான பிராந்திய மொழிகளிலெல்லாம் தனியாக விஞ்ஞானப் பதங்கள் உருவாக்கப்படுவதற்கு இது ஒரு முக்கிய காரணமாகும். ஒரு மொழியில், குறிப்பிட்ட தத்துவத்தை விளக்கும் சொற்களையெல்லாம், அதற்கு முற்றிலும் மாறுபட்ட மாழியில்,வேரூன்ற வைப்பது நடைமுறையில் சாத்தியமல்ல. ஒரு சொல் வேறு பல சொற்களை அணைத்து நிற்பதால், அந்த மொழிக்குப் பதிலாக இன்னொரு மொழியை எழுதுவதாகவே முடியும்.

பிராந்திய மொழிகளில் தனியாக விஞ்ஞானப் பதங்களை உருவாக்குவதற்கு இன்னொரு காரணம், விஞ்ஞானத்தின் அடிப்படைத் தத்துவங்கள் பூர்வீக அனுபவத்தில் உருவாகியிருப்பதாகும். கைவினைஞர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் பிராந்திய மொழிகளிலேயே பயிற்சியளிக்கலாம். மேலும், விஞ்ஞான சாஸ்திரத்தை பெருமளவில் ஜனரஞ்சகமாக்க வேண்டுமெனில் பிராந்திய மொழி மூலமாகவே சாத்தியமாகும். விஞ்ஞானக் கருத்துக்களையும் உண்மைகளையும் விளக்கும் சொல்லாக்கும் ஒரு மொழியில் இல்லையென்றால் அம்மொழி அதன் மதிப்பையும் சக்தியையும் இழந்துவிடும், அதற்கு உயிர் இருக்காது.

இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலுள்ள ஸ்தாபனங்கள் முன்னின்று இத்துறையில் மிகவும் கணிசமான அளவு பணியாற்றி வருகின்றன. யூனியன் கல்வி மந்திராலயத்தைச் சேர்ந்த மத்திய ஹிந்தி டைரெக்டர் காரியாலயம் இம் முயற்சியில் ஈடுபட்டு வருகிறது. எல்லா விஞ்ஞான விஷயங்களிலும், ஹையர்-செகன்ரிக் கட்டம் வரையில் தேவைப்படும் விஞ்ஞானப் பதங்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. பள்ளிப் பாட புத்தகங்கள் விஷயத்திலும் மிகுந்த கவனம் செலுத்தப்படவேண்டும். உயர்தர பாடப் புத்தகங்களைத் தயாரிக்க நாடு முழுவதுமிருந்து நிபுணர்கள் அழைக்கப்படுவார்கள்; அவை பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப்படும். இதனால், பிராந்திய மொழி விஞ்ஞானப் பதங்களில் ஒருங்கிணைப்பு இருக்கும்; விஞ்ஞானக் கல்விக்கு வேண்டிய அடிப்படையும் உருவாகும்.

இந்திய மொழிகளில் விஞ்ஞான பதங்களைத் தயாரிப்பதற்கு வழிகாட்டியாக இருக்கும் பொதுவான கொள்கைகளைத் தயாரிப்பதற்காக மத்திய விஞ்ஞான சொல்லாக்கக் கமிஷன் ஒன்றை இந்திய சர்க்கார் நியமித்திருக்கின்றனர். இக் கமிஷன், இந்தியில் ஒரேமாதிரியான விஞ்ஞான பதங்களை உருவாக்குவது, பிராந்திய மொழிப்பதங்களை ஒழுங்கிணைப்பது ஆகிய வேலைகளை மேற்கொள்ளும்.

தொழில்நுட்பப் பதங்களுக்குச் சரியான இந்திச் சொற்களைத் தெரிந்தெடுக்கும் விஷயத்தில், எந்த சொல், அதிகமான மொழிகளில் பொதுவாக வழங்கப்படுகிறதோ அதைத் தெரிந்தெடுக்க வேண்டும்; பொருத்தமான இடங்களில், பல்வேறு மொழி இலக்கணங்களுக்குட்பட்டு,பிற மொழிப் பதங்களை அப்படியே சேர்த்துக் கொள்ளலாம். இந்திச் சொற்களை உருவாக்குவதில், பொருத்தமான ஆங்கிலப் பதங்களைச் சேர்த்துக் கொள்ளமுடியுமா என்பதையும் கவனித்துக்கொள்ள வேண்டும். அதனால், மொழி வளம் பெறும். புதிய சொற்கள் வேண்டுமென்பதற்காக மட்டும் அவை 'சிருஷ்டிக்'கப்படக்கூடாது.

புதிதாக வளர்ச்சியடைந்து வரும் நாட்டில் விஞ்ஞான சொல்லாக்கத்தை வளர்க்கும் முயற்சி, தீவிர முறையாகக் கருதப்பட வேண்டும். அது விஞ்ஞான முன்னேற்றத்துக்கும் மொழி வளர்ச்சிக்குட் காரணமாக இருக்கிறது; நாம் ஒரு ஆக்கரீதியான,வளர்ந்து வரும் பிரச்னையில் ஈடுபட்டிருக்கிறோம்; ஆகவே, இப் பிரச்னை முழுவதையும் இப்போதே தீர்த்துவிட முயற்சி செய்யக் கூடாது. இப்போதும், எதிர் காலத்திலும் விஞ்ஞானக் கல்வி முறையை எளிதாக்குவதே நமது நோக்கமாக இருக்கவேண்டும். சமுதாயத்தில் சிறந்த விஞ்ஞான அறிவு பரவுவதற்கும் அது வசதியாக இருக்கவேண்டும்.



---

## குளித்தலை டி. மு. கோ.
### S. C. 383/61

தனபாக்கியம் அம்மாள் —வாதி

தற்சமயம் கூடலூரிலிருந்து வரும் முத்துசாமி முத்துராஜா மகன் வயிரப்பெருமாள் பிள்ளை முத்துராஜா —பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் பாண்டு பிரகாரம் அசல் வட்டி ரூ. 145-37 கிடைக்க தாவா செய்து 31—8—61-ல் வாய்தா. ஆக்ஷேபனையை தெரிவிக்காவிடில் ஒரு கட்சி தீர்ப்பு ஏற்படும்.

K. ராஜ கோபால அய்யங்கார்
வக்கீல்

1 | 4466 | 110

---

## சென்னையில் பாரதி விழா

பாரதியார் சங்கப் பொதுக் காரியதரிசி திரு. ஆக்கூர் அனந்தாச்சாரியார் பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

பாரதியார் விழா செப்டம்பர் 10, 11 தேதிகளில் தியாகராயநகரிலுள்ள வாணி மகாலில் நடைபெறும். 10-ந் தேதி காலை 10-மணிக்கு கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் தலைமையில் உயர் நீதிமன்ற நீதிபதி திரு. எம். அனந்தநாராயணன் விழாவைத் துவக்கி வைப்பார். அன்று மாலை பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றுவார்கள். இரவு பாரதியாரின் பாஞ்சாலி சபதம் திரு. எஸ். வி. சகஸ்ரநாமத்தின் சேவா ஸ்டேஜினரால் நடத்தப்பெறும்.

11-ந் தேதி மாலை 5-30 மணிக்கு குமுதம் ஆசிரியர் திரு.எஸ்.ஏ.பி. அண்ணாமலை தலைமையில் பாரதியின் படைப்புக்களைப் பரப்பிய திரு. எஸ். என். சோமயாஜுலு, பண்டித கே. எம். சிவராம் அண்ணல் தங்கோ, திருலோக சீதாராம் ஆகியோருக்குக் கேடயங்கள் வழங்கப்பெறும்.

# அதிசயம்! ஆனால் உண்மை

## தவணையில் மனைவி!

இந்தக் காலத்தில் தவணைக் கடன் மீது வாங்க முடியாத சாமானே கிடையாது என்று சொல்லலாம். ஆப்பிரிக்காவில் தவணைக் கடனில் மனைவியைக் கூடப் பெறலாமாம்.

ஆப்பிரிக்காவின் சில பகுதிகளில் இப்போதும் இந்த விநோதப் பழக்கம் இருந்து வருகிறது என்பது பலருக்கு வியப்பாக இருக்கலாம் - ஆனால், விஷயம் என்னவோ முழுக்க முழுக்க உண்மைதான் என்பதை மறுக்க முடியாது.

உடனடியாக முழுத் தொகையையும் கொடுத்து ஒருத்தியை விலைக்கு வாங்கிக் கொள்ளச் சக்தியில்லை என்றால், தவணைக் கடனில் பெற்றுக் கொள்ளலாம். அவர்கள் முழுப் பணமும் சேரும் காலம்வரை காத்திருக்க வேண்டியதில்லை. முதலில் 66 ரூபாய் கொடுத்து மனைவியை வாங்கிக் கொண்டு, பிறகு பாக்கித் தொகையைப் பலதவணைகளில்கட்டலாம்.

மனைவியின் விலை மட்டும் ஒரு பகுதிக்கும் இன்னொரு பகுதிக்கும் வித்தியாசப் படுகிறது. 140 ரூபாய் முதல் 750 ரூபாய் வரை பெண்கள் விற்கப்படுகிறார்கள். மூன்று வருடங்களுக்குள் முழுப் பணத்தையும் கட்டிவிட வேண்டும். கணவன் தன் புறத்தினால் மனைவி தன் பெற்றோரிடம் ஓடிவிடலாம். விலையாய்க் கொடுத்த பணம் திரும்பிவராது. இதேபோல மனைவி மலடியாக இருந்தாலும், நோயாளியாக இருந்தாலும், அடங்காப் பிடாரியாக இருந்தாலும் கணவனுக்குச் சலுகைகள் வழங்கப்பட்டிருக்கிறது. இத்தகைய நிலையில் கணவன் தன் மனைவியை அவளது பெற்றோரிடம் அனுப்பிவைத்துவிட்டுத்தான் அவளுக்காகக் கொடுத்த பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.



## வாழ்க்கைப் பணம் கோரி கணவன் மனு

மனைவிமார் தங்கள் கணவன்மாரிடம் வழக்குத் தொடுப்பது இயல்பான செய்தி. இதுதான் நாட்டு நடப்பு. அமெரிக்காவில் ஒரு நடிகையின் கணவர் தன் மனைவியிடம் வாழ்க்கைப் பணம் கோரி வழக்கு போட்டிருக்கிறார்.

'என் மனைவி என்னை விட அதிகம் சம்பாதிக்கிறாள். ஆகவே எனக்கு மாதம் 218 பவுன் அவள் கொடுக்கும்படி உத்தரவிட வேண்டும். மேலும், நான் இது வரை வாழ்ந்து பழக்கமாகிவிட்ட வாழ்க்கையை நடத்த இத்தொகையை எனக்கு அளிக்க வேண்டும்' என்று அவர் கோரியிருக்கிறார். இவர் லாஸ் ஏஞ்சல்சைச் சேர்ந்தவர். காடரென்ஸ்டீலி என்ற 27 வயதுடைய சினிமா நடிகையின் கணவர் இவர்.



## காரினுள் அடங்கும் கார்

ஒரு பெரிய காரின் சாமான் வைக்கும் அறையில் அடங்கக் கூடிய அளவில் 225 பவுண்டு எடையுள்ள சிறிய கார் ஒன்று நியூயார்க்கில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காரை இயக்க ஒரு ஸ்குரூடிரைவரும், ஸ்பானரும் இருந்தால் போதும். இந்தக் கார் இரண்டு பேரை ஏற்றிக்கொண்டு 20 மைல் வேகத்தில் செல்லும்.



## பல் சேமிப்பு.

யாருக்காவது பற்கள் கெட்டுப் போனால், இனி தந்தப்பல், தங்கப்பல் இவற்றைத் தேட வேண்டிய அவசியமில்லை. ஒருவருடைய பல் இன்னொருவருக்குப் பயன்படுகிறது.

ஒரே ஆளின் ஒரு பல்லை எடுத்து இன்னொரு இடத்தில் (இடம் மாற்றி) கட்டிவிடலாம். ஆகவே நல்ல பற்களைச் சேமித்து வைப்பதன் மூலம், யாருக்காவது பல் கெட்டுப் போனால் அதற்குப் பதிலாகக் கட்டிவிடலாம். அமெரிக்க பல் டாக்டர் ஒருவர் ஒரு பெரிய மாநாட்டில் இந்தத் தகவலைத் தெரிவித்தார்.



## மணம் இழக்கும் ரோஜா

ஆங்கில நாட்டு ரோஜா மலர்கள் வர வர மணமிழந்து வருகின்றனவாம். அவை இவ்வாறு மணமிழப்பதற்கு ஒட்டுக்கட்டி வைப்பதுதான் காரணம் என்றும் சொல்லப்படுகிறது.



## கரடிக்கு ஆப்ரேஷன்

சிட்னி மிருகக் காட்சிச் சாலையிலுள்ள கரடி ஒன்று பல வாரங்களாகத் தூக்கமில்லாமல் அவதிப்பட்டுக் கொண்டிருந்ததாம். கரடிக்குச் சிகிச்சை செய்ய 14 பேர் கொண்ட கால்நடை வைத்திய கோஷ்டி ஒன்று வந்ததாம். அந்தக் கோஷ்டியை அருகே நெருங்க விடவில்லை கரடி. 15 பேருக்குக் கொடுக்கக் கூடிய தூக்க மாத்திரைகளைக் கொடுத்தும் கரடி தூங்கவில்லை. பின்னர், இரண்டு பாட்டில் குளோரபாமில் தோய்க்கப்பட்ட பஞ்சுக் கத்தையை முகர வைத்து, மயக்க ஊசி போட்டு அதன் பிறகே ஆபரேஷன் செய்தனராம்.

விசை டிரில் ஒன்றையும், உளியையும் பயன் படுத்தி எட்டு மணி நேரம் ஆபரேஷன் நடந்தது. மிகுந்த சிரமத்துடன் நாலு அங்குல நீளமுள்ள கடவாய்ப் பல்லைப் பிடுங்கி எடுத்த பிறகு கரடி வலி நீங்கிச் சுகமாக இருக்கிறதாம்.





Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji News printers, 24, A-Theradi Bazaar, Tiruchi-2.